14th December 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) The answer[a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த ஸ்டேட்மெண்டில் ஷார் காபிடலுக்கு லோன் அட்வான்சு கொடுப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. அதுபோல் பீடித் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்படுக் கொண்டிருப்பதனுல் கூட்டுறவு முறையில் ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்திக்கொண்டு அவர்கள் பணியாற்றுவதற்கு லோன் அட்வான்சு கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பிரையாரிடி படி எதற்கு முதலிடம் கொடுக்கவேண்டும் என்பதைத்தான் நாம் யோசிக்க வேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் சிறு தொழில்கள் என்ஜினியரிங் முறையில் அதிகரிக்கவேண்டுமென்பதற்காகவே இப்போது நாம் இந்தத் துறையில் அதிகமாகக் கொடுத்துக் கொண்டிருக்கிருேம். பீடி முதலிய தொழில்களுக்கு அவ்வளவு அதிகமான பிரையாரிடி கொடுக்கப்படவில்லை.

*Electricity (Kallakuruchi)*

DEPUTY SPEAKER : As the hon. Member, who gave notice of question No. 2316 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 2316 Q.—SRI M. ANANDAN : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கள்ளக்குறிச்சி வட்டம், முடியனூர், மாடூர் கிராமங்களில் மின்சாரம் விஸ்தரிக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : Yes, Sir.

*Electricity (Generation)*

* 2317 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பிற மாநிலங்களிலுள்ள நீரைக்கொண்டு நம் மாநிலத்திற்கு மின்சாரம் உற்பத்தி செய்வதைக் குறித்து சர்ககார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவை ?

THE HON. SRI V. RAMAIAH : The attention of the hon. Member is invited to the answer[b] placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : கேரள சர்க்காருக்கும், நமது சர்க்காருக்கும் ஒரு அக்ரிமெண்டு சோலையாறு முதலிய திட்டங்களில் வந்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அந்த ஒப்பந்தப் படி எவ்வளவு மின்சக்தி அவர்களுக்குக் கொடுப்பதாக ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்ல முடியுமா ?

---

a Printed as Appendix III on pages 856-857 infra.

b Printed as Appendix IV on pages 85[illegible]

[14th December 1961

THE HON. SRI V. RAMAIAH : அந்த விவரங்களை இந்த அறிக்கையிலே கொடுத்திருக்கிறேன். மின்சார சக்தியைக் கொடுப்பதாக ஒப்பந்தம் இல்லை. உற்பத்தியாகக் கூடிய பூரா மின்சக்தியும் நமக்குத்தான் கிடைக்கும்.

*Electricity Supply (Tariff charges)*

* 2318 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961-ம் வருஷம் மார்ச்சு மாதம் 4-ந் தேதியில் 581-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி அண்டை ராஜ்யங்களுக்குக் கொடுக்கப்படும் மின்சக்தி என்ன விலைக்குக் கொடுக்கப்படுகிறது?

(இ) பிற மாநிலங்களிலிருந்து பெறும் மின்சக்தியின் விலை எவ்வளவு?

(உ) இதனால் நமக்கு ஏற்படும் நஷ்டம் எவ்வளவு?

THE HON. SRI V. RAMAIAH : (அ), (இ) & (உ) The attention of the hon. Member is invited to the answer [a] placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : மற்ற மாநிலங்களில் இருந்து பெறுகின்ற மின்சார சக்திக்கு நாம் கொடுக்கின்ற தொகை அதிகமானது இல்லையா? அவர்களிடம் இருந்து நாம் வாங்குவதைவிட நாம் குறைவான விலைக்குக் கொடுக்கிறோம் என்பது உண்மையா? இப்படி ஏன் அதிகவிலை கொடுக்க வேண்டும்?

THE HON. SRI V. RAMAIAH : அந்த மாநிலத்தில் மின் சக்தியை உற்பத்தி செய்வதற்கு எவ்வளவு கிரயம் ஆகிறதோ அதைத்தான் நாம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம்.

*All-India electricity grid*

* 2319 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள் அகில இந்திய மின்சார 'கிரிட்' ஏற்படுத்தப்படும் என்று மத்திய அமைச்சர் கூறியது மாநில சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(இ) அப்படியாயின், மாநில சர்க்காரின் முடிவென்ன?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Electricity workers (dispute)*

* 2320 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the Electricity Board has approached the Tamilnad Electricity Workers' Federation to solve the dispute between the Board and the workers by any negotiation with representatives of the Federation;

---

[a] Printed as Appendix V on pages 859–860 infra.